ஓம்

திருச்சிற்றம்பலம்

# செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினின்றுந்

திங்கள்தோறும் வெளிவருவது

சிலம்பு ௭ } மெய்கண்டான்யாண்டு-௭௱௬ வைகாசித்திங்கள் 1929ஞ்ல மேமூ—ஜூன்மூ { பரல் ௫

பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார் செஞ்சடைமேன் மிளிர்கொன்றை யணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே.

(சுந்தரர்)

*உரை:*

*பொன், பொன்னிறம்; ஆகுபெயர்; மின்னும் இது. ஆர்-பொருந்திய; அசைத்து-உடுத்து; மன்-தலைவன்; திருமழபாடி யென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிருக்கும் இறைவனை நம்பியாரூரர் 'மாணிக்கமே' யென்று விளித்து ஒவ்வொரு பாட்டிலும் பாடுகின்றாராதலின், 'மாமணி' 'மாணிக்கம்' என்னும் இரண்டனுள் பின்னது அம் முறைபற்றி வந்ததென்றும், முன்னது அருமை நோக்கி வந்ததென்றுங் கொள்ளல் வேண்டும்.*

கீளார் கோவணமுந் திருநீறுமெய் பூசியுன்றன்
றாளே வந்தடைந்தேன் றலைவாவெனை யேன்றுகொணீ
வாளார் கண்ணிபங்கா மழபாடியுண் மாணிக்கமே
ஆளாய் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே.

புகழேந்தி:— இறைவனி னருளா
னன்றே யாற்றுவம்; நானில மகிழ்வே

மணிவணன்:—ஈவதை விலக்கி யிருஞ்சிறை யிட்டதுர்த்
தேவதை யாகிய கூத்தன் செயற்குக்
கூலியே கொடுப்பம் கொடுமையே! சிறையாம்
வேலியிற் பட்ட மேதைக ளெழுவரும்
யாண்டுளர்? அவர்களைக் கண்டிட வேண்டினன்.

புகழேந்தி:—படுக்கை யறையிற் றுயின்றனர்; இடுக்கண்
மிகுதியும் பட்டனர் போலும் தகுதியா
முணவினைக் கண்டே நெடுநா ளொழிந்தன
எனநினைக் கின்றேன் எழுமின் சென்று
காண்குவம்; இரக்கக் காட்சி சிறக்கவே.
(இருவரும் போக)

(காட்சி முடிகிறது.)

---

# பொருனை நாட்டுப் புலவர்கள்

[திரு. M. S. பூரணலிங்கம்பிள்ளை யவர்கள் B. A. L. T.]

(உஉ௮-ம் பக்கத் தொடர்ச்சி)

## 15. குமரகுருபர சுவாமிகள்

சீவைகுந்தம் என்னுந் திருப்பதியைச் சிறக்கச் செய்த புலவர் பெருமான் குமரகுருபர சுவாமிகள். இவர் இருந்த காலம் மதுரை மன்னன் திருமலை நாயக்கன் அரசு செலுத்திய பொழுதென்பர். இப்பெருமான் தருமபுர ஆதீனம் மாசிலாமணி ஞானசம்பந்தத் தம்பிரானை ஞானாசிரியராகப் பெற்றனர். காசிமா நகரில் "பாட்சா"வுடன் கலந்து வாதில்வென்று காசி மட்மொன்றைக் கட்டி வைத்தனர். சிறுவயதில் பேச்சற்றவராகத் தோன்றிப் பெற்றோர் தவ வலிமையால் பேசத் தொடங்கினரென்ப. 'கந்

பல நூல்களையுங் கற்று 'வெற்றெரினெரி' சீனியர் அசிஸ்டெண்டா யிருந்தும் சம்பளம் பெற்று உடல் நலமும் ஊக்கமும் பொருந்திய பெரியார் எழுபானிருமையராய் வாழ்ந்து வருகின்றனர். இவர் தந்தை ஆழ்வார் குறிச்சி பழனியப்ப முதலியாராவர். வெள்ளக் காலில் நிலப் பல முடையவர்; மில்ட னெனும் ஆங்கிலக் கவிவா ணன் செய்த சுவர்க்க நீக்கம் எனும் பெரும் காவியத்தின் முதற் காண்டத்தை ஆசிரியப் பாவில் தமிழில் மொழிபெயர்த்துளார். தம் முயற்சிக் கடுத்த 'கால் நடைப்' புத்தக மொன்றை உரை நடையில் உழவர்கட்கு இன்றியமையாத கால் நடைகளைப் பேணு முறையில் எடுத்தோதி யுள்ளார். கம்பராமாயணத்தில் மிக ஈடு பட்ட இப் புலவர் அகலிகையின் கற்புக்கதையை அருமையான வெண்பாவாக வரைந்துளார். விருத்தத்திற்கோ ருயர் கம்பனெ னப் பட்டமையால் இவரும், 'கோம்பி விருத்தம்' என்ற சிறு நூலையு மாக்கியுளார். நெல்லையம் பதியின ராதலின் 'நெல்லைச் சிலேடை வெண்பா' என்ற மற்ரெரு சிறு நூலையுஞ் செய்துளார். வெண்பாவிற் புகழேந்தி என்ற ஆன்றோர் வாக்கிருப்பினும் நள வெண்பாவையும் புறங்காணத் தக்கது அகலிகை வெண்பா வெனலாம்.

## 19. கோனேரியப்பக் கவிராயர்.

ஆழ்வார் திருநகரியில் கோனேரியப்பக் கவிராயர் என்பவர் உபதேச காண்டம் எழுதியவர். இவருக்கு ஊர் காஞ்சி என்றும் இவர் கச்சியப்ப சிவாச்சாரியார் மாணவரென்றும் சொல்வர்.

## 20. காந்தியார்.

ஆழ்வார் திருநகரிக் கடுத்துள்ள தென் திருப்பேரி யென்ற ஊரில் காந்தியா ரென்ற மாதர்மணி பாவாக்குவதில் மிகத் திறமை யுற்றவளா யிருந்து சீவக சிந்தாமணி, பரிபாடல் ஆதிய பழைய நூல்களில் இடைச் செருகல்களாக அநேக செய்யுள்களை அமைத் துள ரென்று அறிகின்ரேம். சிந்தாமணியில் மட்டுமே 400-செய் யுட்கு மேற்பட்டன இடைச் செருக லென்பர். தனி நூலாக ஒன்றும் இவ் வைணவக் காரிகையார் ஆக்கியதாகப் புலப்பட வில்லை.

## 21. காரியார்.

கொற்கையம்பதி வாழ்ந்த புலவர் கணிதத் துறையிற் றேர்ந் தவர். அவர் காரியார் எனப்படுவர்.

பன்னு வடசொற் பனுவல்தனை இப்போது
கன்னிதமிழ் வாயாற் கட்டுரைத்தேன்—முன்னம்
மகிழ்கின்ற வென்னின் வழிவந்த கணக்கெல்லாம்
இகழ்வின்றி யேயுரைப்பேன் யான்.

இவ்வருமையான கணித நூல் தமிழ் நாட்டில் முன்னர் வழங் கிற்று. இப்பொழுது யாழ்ப்பாணத்தார் அதனை நன்கு மதித்து வருகின்றன ரென்பர். ஒரு படி நெல்லில் 14000 நெல்லுள தென் றும், ஒரு படி அரிசியில் 38,800 அரிசியுள தென்றும் இத்தகைய நுட்பமான கணக்குகள் அதனி லுளதென்றும் தமிழ்ப் பள்ளியிற் படிக்குங்கால் அறிந்த துண்டு.

'நறுந்தொகை' பாடிய பாண்டியன் கொற்கையம் பதியில் வீற்றிருந்த குலசேகர னென்பான். நைடதம், கூர்ம புராணம், இலிங்க புராணம், காசி காண்டம் இவற்றின் ஆசிரியராகிய அதி வீரராம பாண்டியன் தென்காசி நகர் வாசியா யிருந்தனன்.

## 22. பசலையார்.

கொற்கையம் பதியி னருகிலுள்ள நாடு மாறோக்க மென்றும் மாறோக மென்றும் பெயர்பெற்றிருந்தது. அதில் பசலையாரென்ற பெயரால் புதுமைவாய்ந்த மாதரசி யிருந்ததாகத் தெரிகின்றது, இம்மாது ஊர்ப் பெயருடன் மாறோக நப்பசலையா ரெனப்படுவர். ஏனெனில் போந்தைப் பசலையார் (அகம் 110) குமிழிஞாழலா ணப்பசலையார் (அகம் 160) காமக்கணிப் பசலையார் (நற்றிணை 243) என்ற பலரிருந்தனர். மாறோகத்து நப்பசலையார் நற்றிணை 304-ல் கூறியதை ஆராயின் பசலையா ரென்பது காரணப் பெயரா யிருக் கலாமென்றெண்ண விடமுள்ளது.

"புணரிற் புணருமா றெழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயவெ
னணிநலஞ் சிதைக்குமார் பசலை"

## 23. கடிகைமுத்துப் புலவர்.

திருநெல்வேலிச் சீமையில் பெரிய பாளையப்பட்டு எட்டையபுரம். இதனை (1705—1725) யாண்ட பாளையக்காரர் செகவீரராம வெங்கிடேசுர எட்டப்ப நாய்க்கர். இவருடைய வாசற் புலவரா யிருந்தவர் பலரில் கடிகை முத்துப் புலவர் புகழ் பெற்றவர். இவராக்கிய நூல்களனைத்திலும் அலங்காரங்கள் வருணனைகள் மிகுந்துள. 'கழிக்கரைப் புலம்பல் அல்லது சமுத்திர விலாசம்' என்ற நூலில் அரசனைக் கடலுடன் ஒப்புமைப் படுத்திச் சிலேடை மடக்கு முதலியனவற்றால் விளக்கி யுளார். இதில் காசியினின்று குருட்டுப் பார்ப்பான் ஒருவன் செந்திலுக்குச் சென்று செந்தில் நாயகனை வணங்க ஒரு கண்ணைப் பெற்றானென்றும், செந்திற் கடவுள் ஏவலால் எட்டப்பனைப் பார்க்கவும் மற்றொரு கண்ணைப் பெற்றன னென்றும் ஒரு கதை காணப்படும். 'திக்கு விசயம்' என்ற நூலில் 320 செய்யுளுள. அது சிவகிரி வரகுண ராம வன்னியனுடைய செல்வம், சிறப்பு, பராக்கிரமம் முதலான குண வியப்பை விளக்கும். ஊற்றுமலை மருதப்பத்தேவர் பேரில் 'மதன வித்தார மாலை' ஒன்றைச் செய்தனர். எட்டப்பன் பேரில் 'சாமரச மஞ்சரி' என்ற மஞ்சரி யொன்றும் ஆக்கியுளர். இப்புலவர் தம் மரணத் தருவாயில் பிள்ளைகள் வருத்த முற்ற பொழுது 'ஓ ரப்பன் போனால் எட்டப்பன் இருக்கிறான்' என்று மனவன்மதி செய்வித்தனராம். 'கடிகை' யென்பது குடித்தலைமைப் பெயரென்பர். திருவிடைமருதூ ரந்தாதி யென்பதையும் இவரே ஆக்கினரென்பாரு முளர்.

## 24. கடிகை நமச்சிவாயப் புலவர்.

பர்த்துரு ஹரி என்ற நூலைத் தமிழில் மொழிபெயர்த்த கடிகை நமச்சிவாயப் புலவர் இவர் வழிவந்தவராம். சீறாப் புராண மாக்கிய மறுப் புலவர் இவரது நன் மாணாக்கராம். கடிகை முத்துப் புலவர் காலத்தவரும் எட்டயபுர வாசல் வித்வானில் ஒருவருமாகிய நாகூர் முத்துப் புலவர், வெங்கிடேசுவர எட்டப்ப மன்னனை 151 செய்யுளிற் பலதிறப்படப் புகழ்ந்துளார்.

## 25. வீரபாண்டியப் புலவர்.

தூத்துக் குடியில் கத்தோலிக் சிமான் கேபிரீல் பெல்டோனு வாலும், பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்திற் கதிபதி யாகிய கட்டப் பொம்ம நாயக்கராலும் பாதுகாக்கப் பெற்றவர் வீரபாண்டியப் புலவராவர். பிறப்பிற் பாணர் தைபற்காரர் இருவர் பேரிலுஞ் சில பிரபந்தங்கள் பாடி யுளர். 'ஒய் ஒய் புலவரே, தைபல் நல்ல தைபல், பார்த்தீரா' வென்று யாதவ குலக் கவிவாணர் சதுராடிய தாசியைக் கண்ணுற்றுப் பகடிப் பேச்சுப் பேசின அமயம் 'ஆட்டுக்குத் திறமான தைப' லென்று மறு மொழி யளித்து அவர் வாயை அடக்கின ரென்று கூறுவாரு முளர்.

## 26. சங்கர மூர்த்திக் கவிராயர்.

இராச பாளையத்தில் கார்காத்த வேளாளர் குலத்திற் பிறந்து சிவஞான போகிகளிடங் கல்வி கற்றுத் தேர்ந்து கன்னி வாடி பாளையக்காரர் மீது 'கோவை' பாடி யானைக் கன்றும், வளமான நன்செய் நிலங்களும் பெற்றவர் சங்கர மூர்த்திக் கவிராய ரென்பார். சேற்றூர்ப் பாளையக்காரர் பேரில் 'பள்ளுப் பிரபந்தம்' பாடியவரும் அவரே. இப் பள்ளில் தம் வரலாறுகளிற் சிலவற்றை யமைத்துளார். இவர் கன்னிவாடி, சிவகிரி யாதிய குறுநில மன்னரால் போற்றப் பெற்றவர்.

## 27. ஆண்டான் கவிராயர்.

'வசை கவி' என்று பட்டம் பெற்ற ஆண்டான் கவிராயர் என்பார் ஒட்டப் பிடாரத்தில் ஒரு வைணவப் பார்ப்பன ரென்பர். 120 ஆண்டுகட்கு முன்னிருந்தவர். 'ஆற்றோடே போனாலும் ஆற்றூரோடே போகாதே' என்று ஆற்றூரைப் பழித்தன ரென்ற வசைக்கூற்று இன்றும் நிலவுகின்றது. இவருடைய வசைகவி மாதிரிக் கொன்று இவண் வருவது.

"வாயெரியக் கையெரிய வயிறெரியச் சட்டிவைத்து வறுத்துக் கொட்
டாயெரியக் கடினமுட னரைவயிற்றுக் கன்னமிட்ட கடினக் காரி [டிக்
தாயெரிய மகளெரியச் சேஷியெனு மொட்டைமுண்டை தலைமேற்
[பற்றித்
தீயெரியக் கண்டக்கா லென்னுடைய வயிற்றெரிச்சல் தீருந் தானே."

## 28. தண்டபாணி சுவாமிகள்.

இற்றைக்கு முப்பதாண்டுகளின் முன்னர் 1818-ல் இறையடி படிந்தவர். 1838-ல் திருநெல்வேலி வேளாண் மரபிற் பிறந்து சைவராகத் திருச்செந்தூர், பழனி, சென்னை யாதிய தலங்களில் வதிந்து திருவாமாத்தூரிற் றங்கி தண்டபாணி சுவாமிக ளென்றும், முருகதாச சுவாமிகளென்றும், திருப்புகழ்ச் சுவாமிகளென்றும் பெயர் பெற்றுப் பன்னூல்களை யாக்கிய பெரியவராயிருந்தனர். இவரால் ஆக்கப்பெற்ற நூல்களாவன:—தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், பழனித் திருவாயிரம், தெய்வத் திருவாயிரம் திருவாமத்தூர்ப் புராணம், திருமயிலைக் கலம்பகம், சென்னைக் கலம்பகம், ஒலியலந்தாதி, புலவர் புராணம், திருச்செந்தூர்க் கோவை, அருணகிரி நாதர் புராணம், ஏழாயிரப் பிரபந்தம், ஏகபாதத் திதழகலந்தாதி, பதிகச் சதகம், சதகப் பதிகம், திருச்செந்தூர் திருப்புகழ், நான்கு நூல், அறுவகை யிலக்கணம் முதலியன. இப்புலவர் சந்த விருத்தப் பா எழுதுவதிற் கைதேர்ந்தவர். திருக்குருகூர் ஞானசித்த சுவாமிகள் இவருக்குச் சிறந்த நண்பர்.

மரகதகிரிக் கடவுள் மாமலர்த்தாட் கன்பாய்
சரதபத்தி யாப்பதிகஞ் சாற்றி—விரதபயன்
பெற்றுயர்ந்த ஞானசித்தன் பீடும் பெருந்தகவும்
கற்றுயர்ந்தோ ரேயறிவர் காண்.

புலவர் புராணத்தின் ஒரு பாகம் 1904-ல் பி. ஏ. த் தேர்வினுக்குப் பாடமாக அமைக்கப்பெற்றிருந்தது. முழு நூலையும் அவர் மகனார் அச்சிட்டுளர். இப்புராண நூற்பொருள் குறித்த பாட்டு இதுவாகும்.

‘அகலமாகு மருந்தமி ழாக்கமுஞ்
சகலர்காணத் தகாவருட் டன்மையும்
பகலைநேர்புகழ்ப் பாவல ராண்மையும்
புகலுமிந்தப் புராண முணர்த்துமே.’

இதுகாறு மெடுத்துரைத்த புலவர்கள் முப்பதின்ம ராவர். சுருங்கக் கூறியும் அன்னா ரொத்த புலவர் பலர் பெருமையை

எடுத்தாளக் கால மிலதாதலின் விடுத்துளேன். தருணம் வந்துழி இன்னும் பலர் புலமையை வியந்து பேசுவ லேனும், நூற் செய்யுந் திறத்தினர் மேற் கூறிய புலவர் பெருமான்களின் யாப்புத் திறமையை மேற்கோள்களுடன் விரித்துரைக்குமாறு இறைவனை வழுத்துவன்.

---

# ஆணும் பெண்ணும்*

[திரு. மு. பொ. ஈசுரமூர்த்தியா பிள்ளையவர்கள்]

ஆண் தன்மை வீரத்திற் சிறந்தது; பெண் தன்மை அன்பிற் சிறந்தது.

ஆடவர் உடம்பு போருக்கும், பிழைப்புக்கு வேண்டும் பொருள் தேடுவதற்கும் பொருத்தமாக ஊக்கமும் உறுதியும் அமையப்பெற்றுள்ளது. பெண்பாலுடம்பு தன்னைப் பாது காக்கும் ஆடவருள்ளங் கவரும் அன்பும் அழகும் அமையப் பெற்றது.

பொதுவாக ஆண்மை எதிர்க்கும் இயல்பிற்று; பெண்மை பணியும் இயல்பிற்று. ஆண்மை வலியச் சண்டைக்குப் போவது; பெண்மை வந்த சண்டையைக் காப்பது. ஆடவர் உள்ளம் வன்மையா யிருக்கும், பெண்டிர் உள்ளம் இளக்கமா யிருக்கும். ஆண் பிள்ளைக்குத் துணிவு உண்டு; பெண் பிள்ளைக்கு உறுதி யுண்டு. ஆண் பிள்ளைக்கு எடுப்பு உண்டு; பெண் பிள்ளைக்கு அமைதி யுண்டு. ஆண் பிள்ளை ஆள்கின்றான்; பெண் பிள்ளை அன்பால் வயப்படுத்துகின்றாள்.

ஆண்மகன் சொற்களால் நயப்படுத்துகின்றான்; பெண் மகள் பார்வையாலும் இணக்கத்தாலும் நயப்படுத்துகின்றாள். ஆண் பிள்ளையின் சட்டங்களைப் பார்க்கிலும் பெண் பிள்ளை யின் பார்வை வலிமையுடையதாகும். ஆண் பிள்ளையின் வாதத்

---

* பெர்நார்டு ஆலண்டர் M. D. ஆங்கிலத்தில் எழுதியது.